தம் பிரமமென்பதில், சச்சிதானந்தவிருத்தியிற் பிரதி பலித்த சைதன்னியானுபூதியே விசேஷணமாகும்.

மஅ- விசேஷியமாவது, நிருபாதிகபிரமசைதன்னி யமே உபாதியிற் சச்சிதானந்தமாய் விளங்குவதால், அச்சைதன்னியானுபூதியேயாம்.

மகூ- விசேஷமாவது, அதிந்திரியங்களாயுள்ள பூ தங்களின், பரமாணுக்கள் ஒன்றுக்கொன்று பேதமு டையதாக நிரூபணங் காணப்படுவதால், அவற்றின் பேதத்தின்பொருட்டு விசேஷமெனச் சாஸ்திரசங்கே தத்தால் ஒப்பியதுபோல், பிரமசீவசைதன்னியங்களு க்கு ஸ்வரூபத்தால் தானே பேதமொப்புகிறதின்பொ ருட்டு அவற்றின்விசேஷமிருக்கின்றதாயொப்பியதா ம். இது இதர்மதங்களினுபகாரம்.

உய- வெதிகரணமாவது, பின்னாதிகரணமெனப்ப டுவதாம்,

உக- சமானாதிகரணமாவது, இவன் அரசனென்ப தில் இவனென்றஞானமும் அரசனென்றஞானமும ஒருடலைப்பற்றியிருப்பதுபோல், அகம்பிரமாஸ்மியெ ன்றவாக்கியானுபூதியில், பிரமாகாரமாய் விளங்கியஅ கண்டாகாரவிருத்தியிற் பிரதிபிம்பித்த ஜகத்காரண சைதன்னியத்துக்கும் அவஸ்தாத்திரயசாக்ஷியாய் விளங்கிய சாக்ஷிவிருத்தியிற் பிரதிபிம்பித்த ஆத்மசை தன்னியத்துக்கும் நிர்விசேஷ கூடஸ்தசைதன்னியு

மே அதிகரணமாயிருப்பதால், அவ்விதநிர்விசேஷபிர மசைதன்னியத்தைத்தவிர அவ்விரண்டுசைதன்னிய மும் வேறில்லாததினால், அவ்விதஏகாகாரபிரமாநுபூ தியேயாம்.

இவ்விதசமானாதிகரணம் முக்கியமெனவும் வா தையெனவும் இரண்டுபிரிவுடையதாகும். அதில் முக் கியசமானாதிகரணமாவது முன்சொன்னதேயாம். வா தாசமானாதிகரணமாவது சீவபிரமோபாதிகள் தமப்பி ரகாசங்கள்போல், விரோதிகளானதால் அவைகளுக் குச் சாமானாதிகரணியமுக்கியஞானத்தாற்கூறத்த காது. சமாதிபலத்தாற் சீவோபாதி நசித்திடற்கூடு மென்பதாம்.

மேலும் முக்கியசமானாதிகரணமேற்பட்டிடில்; எ ப்பொழுதும் சீவஜகத்காரணசைதன்னியங்களுக்கு நிர்விசேஷபிரமசைதன்னியத்தைத்தவிர அதிகரணம் வேறில்லாததினால், சித்தசாதனமென்றதோஷமும் வ ரத்தெரியும். அப்படியே பாரமார்த்திகத்தில் வஸ்து அங்கியானதால், ஒருபதார்த்தத்துக்கு அதை அதிக ரணமாகநிரூபிக்கவுங்கூடாது. ஆகையால் கேவலபார மார்த்திகவிசாரணைமாத்திரத்தால் சமானாதிகரணமுறை ப்படத்தகாது. ஆகையால் வியாவகாரிகத்தில் வந்தசீ வோபாதி வியாவகாரிகமாகவே நசித்திடவேண்டும். அங்ஙனம் சீவோபாதிநசித்திடில்; பின்பு இரண்டுசை

ஜன்னையபூமனென்றுகிவிட்டதால், சாமானாதிகரண்ணியங்கூடும். ஆகையால் வாதாசாமானாதிகரண்ணியமே பிரமாணுபூதியில் உபகாரமேயன்றி, முக்கியசமானாதிகரணம் ஒப்பத்தகாதென்று சேசுரசாங்கியத்தத்திலும், அபிமானமுடைய அத்துவிதிகளில்ஏகதேசிகளும் கூறுகின்றார்கள். அந்தவிஷயத்தில். சிலவாதியர்கள் சீவோபாதியால் வாதாசாமானாதிகரண்ணியுத்தாம்கூட சீவபிரமசாமானாதிகரண்ணியம் ஒப்புகின்றது அசங்கதமென்கிறார்கள்.

எங்ஙனமென்னில்? ஒருராஜசேவகனை நீமஹாராஜர் என்று ஆதரித்திடில், அவன் அப்படிமஹாராஜாவாகத்தகாதே, அவ்விதப்பிரயோகம் அவனிடத்தில் எப்படி உபசாரமாத்திரமாயாகுமோ அப்படிப்போல், சுருதியால் அகம்பிரமாஸ்மியென்று நிரூபிக்கப்பட்டிருந்தபோதிலும், உபகாரமேயன்றிப் பாரமார்த்தமல்லவென்றும்,, சிலர்கள் மஹாராஜன்போலுள்ள கனம்பொருந்திய ஒருபுருடனை இவன்மஹாராஜனென்றிடில், மஹாராஜசமானனெனக் கொள்வதுபோல், பிரமசமானனெனக் கொள்ளத்தக்கதேயன்றி ஒருக்காலும் ஐக்கியங்கூடாதெனக் கூறுகின்றார்கள். இங்ஙனம்வரத்தெரிய முக்கியஅத்துவிதிகள் அதைக்கண்டிக்கின்றார்கள். வேதத்திற்கு அந்நியதாகற்பனைசெய்கின்ற மதவாதியர்களின்பொருட்டு விவாதஞ்செய்கின்றது

நமக்கு அகத்தியமல்ல, ஆனால் வாதாசமானாதிகரணவா
தியர்கள் அத்துவிதிகள்போற் றோற்றுவதால். அவர்க
ளபொருட்டுமாத்திரம் உத்தரங்கூறப்படுகின்றது.

(௧௰௩) சித்தசாதனதோஷம் வருமெனக்கூறியது
சரியே, ஆயினும் பாரமார்த்திகத்தில் அவித்தையாசம்
பந்தமிருக்கின்றதுபோலத்தோற்றியதால், அவ்விதத்
தோற்றுதலான அவித்தையாநிவிர்த்தி ஞானமன்றிக்
கூடாததினால், அவ்விதஞானமும் சாங்கியவிசாரணை
யன்றிச் சித்திக்கமாட்டாததினால், விசாரணையாற் பிரா
ந்தியாற்றோன்றிய சீவோபாதியாம் அஞ்ஞானம், அ
திஷ்டானபிரமமாத்திரமாயில்லாமல் நீங்கிட அக்காலத்
திற் சீவேசபேதமாய்த் தோற்றிவிளங்கிய சைதன்னி
யப்பிரதீதி அதிஷ்டானபிரமமாத்திரமாய் அத்வைதத்த
விரவேறில்லாததாகக்கொண்டு அநுபவத்துக்குவருவ
தால், அவ்விதசீவேசவுபாதிநீங்கிய அகண்டாகாரசை
தன்னியாநுபூதியிற் சைதன்னியபேதங்காணப்படாத
தினால், முன் பிரதீதிமாத்திரத்திற் றோன்றியசீவேச
சைதன்னியங்களுக்குப் பேதம் நீங்கி அதிஷ்டானபிர
மசைதன்னியாநுபூதியில் முக்கியசாமானாதிகரண்
ணியங்கூறப்படுகை.

(௨௰௪) ஆன்மா அசங்கியானதால் அவனிடத்தி
ல் சீவேசசோபாதிகசைதன்னியங்களுக்கு இருக்கை
கூடாததினால், முக்கியசாமானாதிகரண்ணியமே சித்

ரிக்ஷித்தகாதென்றதில் யதார்த்தமாய்ச் சிவேசசோபா திகளைதன்னியங்களுக்கு அதிஷ்டானத்திலிடமாய்ச் சாமானாதிகரண்ணியம் ஒக்கிறதில் அதுசார், " பூர்த்தம் வந்ததுபோற்றோன்றிய அதிகாரிகளுக்கு இவ்வித முக்கியசாமானாதிகரண்ணியமன்றிப் பிரமாபரோக்ஷசாக்ஷாத்காரானுபூதிசித்திக்கக்காரணமில்லாததினால், அகந்நியும் முக்கியசாமானாதிகரண்ணியம் ஒத்தே தீரவேண்டுமெனவும்,, வாதாசாமானாதிகரண்ணியும் அநாவசியமென்றுங்கூறுகின்றார்கள்.

இவ்விருவர்களின் அபிப்பிராயம் முக்கியசாமானாதிகரண்ணியவாதியர்கள் ஞானத்தாற் பிரமசாக்ஷாத்காரமுண்டாவதால், மனோநாசம் பிரயோசனமில்லையெனக்கொள்கின்றார்கள். வாதாசாமானாதிகரண்ணியவாதியர்கள் பிரமஞானமென்பது திரிபுடிசூனியஞானமானதால் விசாரணையாற் கிடைத்தஞானம் விருத்திஞானமானதால், விருத்திநாசமின்றி அதிஷ்டானஞானநுபூதி கிடையாதென்று கூறுகின்றார்கள்.

இதின்சமாசம் முக்கியசாமானாதிபக்ஷத்திற் பிரமாபரோக்ஷ சாக்ஷாத்கார முண்டாயினும், அவ்வித அநுபூதியில் விருத்தியிருந்திடினும் நிர்விருத்திகனைகன்னியமே அநுபூதியாகத் திருப்பிக்குவருவதால், அவர்களின் விருத்தியுஞ் சூனியம்போலவேதான். வாதாசாமானாதிகரண்ணியர்கள் மதத்தில் மனோநாசத்

னும், வாதசாமாநாதிகரண்ணியத்தில் முக்கியசாமாநாதிகரண்ணியம் அகத்தியம் ஒப்பத்தக்கதாகவே இருக்கின்றது: முக்கியசாமாநாதிகரண்ணியபக்ஷத்தில் வாதசாமாநாதிகரண்ணியம் கணமாத்திரமாயினும் சித்தித்ததாகவே இருக்கின்றது. அதிகாரிபேதத்தால் இரண்டும் உபகாரமேபடுகின்றது. முக்கியசாமாநாதிகரண்ணியம் முக்கியஅதிகாரியைப் பற்றியது. வாதசாமாநாதிகரண்ணியம் மத்திம அதிகாரியைப்பற்றியது. இரண்டதிகாரியினாலும் அடைந்தஞானத்தில் அபரோக்ஷசாக்ஷாத்காரானந்தரம் பேதங்கிடையாது: சாதனதசையில் விவாதமேயன்றி அடைந்த சத்தியத்தில் விவாதங்கிடையாது.

முற்றிற்று

பத்தாவது

## அகண்டவிருத்திசோதனையுரைத்த பிரகரணம்.

ஞாதுரு ஞானம் ஞேயம் இவற்றுள் ஞேயத்தையொன்றுமேயமாய் உபாசிக்குந்தன்மை.

சமாதியில் அதிஷ்டானமாத்திரமாகச் சேஷித்தது பின்பு விழிக்குங்காலத்தில், நிராகாரமான விளங்குதல்மாத்திரமாய் விளங்கத்தெரிய, அக்காலத்தில் அதை திரிபுடாந்தமற பார்வையின்வருத்தி முந்திய

விளங்குதலைக் கிரகிக்க வல்லமையற்று நிராகாரமா ய் வியாபகப்பரவுகலையடைய, அவ்விருத்தியிற் பிர திபிம்பித்த சைதன்னியத்தை இதுவென்றுசுட்டித் தெரிய அவ்விதமாகச்சுட்டிய இதுவென்றவிருத்தியி ற பிரதிபிம்பித்த சைதன்னியத்தைப், பூர்வவாசனை யால் அகண்டனென்று நமனுபமுடையதாகச் சங்க ற்பிக்க அவ்விருத்தியினால் அகண்டமாய்த்தோற்ற, அ வ்விருத்தியிற் பிரதிபிம்பித்தசைதன்னியத்தையும் அ வ்விருத்தியையும் மூன்று இதுவென்றவிருத்தியையும் அதிற்பிரதிபிம்பித்த சைதன்னியத்தையும் ஒன்றாக விளங்குவித்திடக் காரணமாய்நின்ற கூடஸ்தவிளக்க த்தை அறியவல்லமையில்லாத நிராகாரகூனிய விரு த்தியிற் பிரதிபிம்பித்த சைதன்னியமே ஆவரணவிரு த்தியையுடையதனதுசக்தியால், தன்னில் உள்ளடங் கிய அகங்காரநாநாருசக்தியைப், பிந்தியவிருத்திக் கு இதுவென்றுகிரிய விருத்தியாகக் காண்பிக்க, அவ்விதகிரியயும்போல விளங்குகின்ற இதுவென்ற ஞானசக்தியே தன்னுளடங்கிய ஆவரணஞானசக் திகளில் மனதுக்கு உள்ளபடி தெரிய வல்லமையின் றி அகண்டமென்று சங்கற்பிக்க, அவ்வகண்டவிருத் தியிற் பிரதிபிம்பித்தசைதன்னியமும் ஆவரண ஞா ன சக்திகளால் ஆவரிக்கப்பட்டுக், கூடஸ்தவிழுங் கு தல், நிராகாரகூனியவிருத்தி அதிற்பிரதிபிம்பித்த ஞா

தாரு இதுவென்ற சமாதயையுள்ள ஞானவிருத்தி அதிற் பிரதிபிம்பித்த சைதன்னியமாகிய ஞானம் அகண்டமென்று விஷயாகார சங்கற்பரூப அகண்டாகார ஞேயவிருத்தி அதிற்பிரதிபிம்பித்த சைதன்னியம் இவ்விரண்டும், அகண்டாகாரஞேயவிருத்தியிற் சூக்ஷ்மமாயடங்கி அகண்டஞேயவிருத்தியைப் பார்க்கவேறெதோற்றுதலைகளாகத் தோற்றி ஞேயமாத்திரமாய் விளங்குகின்றது அவற்றை மேற்சொன்னபடி பிரித்துப்பார்த்திடத் தெரியவரும்.

முற்றிற்று
பதினெண்ருவது
சரியாதிநிந்தாநிவேதனப்
பிரகரணம்

சருவஞ்ஞனும் சருவவல்லமையுடையவனும் சருவதயாபரனும் இடைவிடாத்தன்மையின யெங்குமுள்ளவனும் ஈக்கள் மதுவைப்போல எம்மதத்தோரும் என்கடவுள் என்கடவுளென்று விரும்பிசார்ந்திடத்தக்க ரசக்கடலாயும் என்றும்ஒன்றுபோல் விளங்குகின்றதாயுமுள்ள சருவகாதனாகிய கடவுளை சரியை கிரியை யோகம் இம்மூன்றின் சமரசப்பெருமையால் அவனது அநுக்கிரகத்தைஸ்துதித்து ஞானக்கடலில் மூழ்குதலின் விவரம்.

சரியை கிரியை இவ்விரண்டும் கர்மகாண்டத்தில் உபகாரமானதால் அக்கர்மகாண்டத்தில் யாகாதிகிருத்துக்களென்ன, ஆலயாதி ஈஸ்வரவிஷய கிருத்துக்களென்ன, இவ்விரண்டிலும் குண்டமண்டபவேதிமுதலாகிய நிருமாணம் சரியாரூபமானதால். அர்ச்சரியா விஷயத்தில் கிரியையென்ற உபாசனை சாத்தியமானதால், அவ்வித உபாசனை ஈசனை முன்னிட்டுவிளங்குவதால், அவ்விதஈசனைத்தெரியச் சீவர்களுக்கு வல்லமையில்லாதநிலையில், அதிமூடமாயுள்ள இந்தஜகத்திற்கு, அதிலகுவாக ஈசனை அறியும்பொருட்டு அக்கினி சிவலிங்காதிகளிற் சாஸ்திரங்களாற் சர்வவியாபகமானஈசனை மந்திராதிகளாற் பாவித்துஉபசரித்திட அவனதுபிரசாதத்தால் அவனதுசுபாவம்தெரியக்கூடுதல்.

இலிங்கம் அக்கினி முதலானவைகள் ஜடங்களாயிருந்தபோதிலும், அவைகளிற் பாவிக்கப்பட்ட ஈசன் சித்துரூபனாதலால், அவைகளிற் செய்யப்பட்டஉபசாரங்கள் நித்தியதிருப்தனாகியஈசனுக்கு, ஒரு உபகாரமுமில்லாமற்போனாலும், "ஜகத்தில் மஹாகனம்பொருந்திய மஹாராக்ஞியராணியவர்களுக்கு ஜகத்தால் ஒருபிரயோஜனமுமில்லாமற்போனாலும் ஜடமாயுள்ள அவர்களதுமுத்திரைக்குச் சகல இந்து ஐரோப்பியர்களும் வெகுதிரவியச் செலவுடையஉப

ரத்தை நீக்கி ஈசன துயாதையுண்டடண்ணிக் குவிங் துவணங்கிடச் செய்விக்கின்றது. ஆகையாற் கல்வி கள் வித்வான்களுக்குமாத்திரம் உபகாரப்படும்: ஆ லயாதிகள் யாவர்களுக்கும் ஈசனைத்தெரிவிப்பதற்கு உபகாரப்படும் இதுமூன்றும்பிரயோசனம்.

அன்றியும் இவ்வித ஆலயாதிதோறும் ஈசனைவண ங்கிய பெரியோர்களுக்கு வெகுவிதநன்மைகள் கி டைத்திருப்பதால்; இப்போதுங் கிடைத்துவருவதா ல்; அப்படியே சாஸ்திரங்களும் வெகுபெருமைபாகச் சொல்வதால், அவனைச் சரியை கிரியையாதிகளால் அ கத்தியம் வணங்கவேண்டும்.

ஆனால ஜகத்தாலுண்டுபண்ணப்பட்ட ஆலயாதி களில் விளங்கிய ஈசனை, நாம்பணங்கவேண்டுமென்ன, வணங்காவிடில் என்னதாழ்வுவருமென்றால்? ஒ ருஅரணியிற் கடைந்தஅக்கினி நம்மாலுண்டுபண் ணப்பட்டிருந்தபோதிலும் நாமுண்டுபண்ணினதுதா னெயென்று அவமானிக்கவுபகாரப்படாது. எவ்வா றெனில் உட்லைக்கொடுத்தால் எரித்துவிடும், சீதகால த்தில்அநுசரித்தாற் குளிரைநீக்கும். அப்படிப்போல் நிந்தித்திடில் அவனதுகோபத்திற்குரித்தாவான். வண ங்கிடிற் கருணைக்குரித்தாவான்

சாஸ்திரங்களிலே நாதனானவன் யோகியர்களு க்குஉள்ளத்திலிருக்கிறுனென்றும், ஞானிகளுக்கு

எங்குமிருக்கிறானென்றும், பிராமணர்களுக்கு அக்கினியில் இருக்கிறானென்றும், அற்பபுத்தியாளர்களுக்கு விக்கிரகமுதலானதுகளிலிருக்கிறானென்றும் சொல்லியிருப்பதில், விக்கிரகாதிகளை உபாசிக்கின்றவர்களை அற்பப் புத்தியாளர்களென்று சொல்லியிருக்க, நீர் இப்படிக்கூறியதென்னவெனில்? அக்கினியில் ஈசனை உபாசனை வேதமந்திரங்களின் அப்பியாசத்தாற் சித்திக்கவேண்டுமென்று சாஸ்திரங்களிற் காணப்படுவதால், அவ்விதவேதம் பிராமணர்களுக்கே உரித்தென்று காணப்படுவதால், அக்கினியிற் பிராமணர்களுக்கு நாதனிருக்கிறானெனக்கூறியது. அவ்விதவேதங்களிற் சொல்லியநாதனை உள்ளத்திலும் அறியவேண்டுமெனக்கூறிய சாஸ்திரப்படி காரணகலைகளை யோகத்தாலடக்கி யுள்ளத்தில் ஈசனைத்தரிசிக்க வல்லமையுடையவர்களான யோகியர்களுக்கு அவ்விதவல்லமையிருப்பதால், அவர்களுக்கு உள்ளத்தில் நாதனிருக்கிறானெனக்கூறியது. ஈசன் எங்குமிருக்கிறானெனக்கூறிய ஞானசாஸ்திரப்பிரகாரம், ஈசன் எங்குமிருக்கின்றதாக அறிய கடவுளதுகருணையை அடைந்த ஞானியர்களால், எங்கும் ஈசனை அறிய உபகாரப்படுமானதால், அவர்களுக்கு எங்குமிருக்கிறானெனக்கூறியது. வேதமந்திரங்களை அப்பியாசிக்க வல்லமையில்லாதவர்களாயும், அதில் அதிகாரமில்

லாதவர்களாயும், உள்ளத்தில் ஈசனைத்தரிசிக்க வல்லமையில்லாதவர்களாயும், எங்கும் ஈசனிருக்கின்றதை அறியவல்லமையில்லாதவர்களாயும், இருக்கின்றவர்களுக்கு விக்கிரகமுதலியதில் ஈசனிருக்கின்றதாகக்கூறியதில், அவர்களை அற்பபுத்தியுடையவர்களென்று கூறப்பட்டிருக்கின்றதாகக்காணப்படுகின்றது. அதில், சூரியனும் அக்கினியிலும் உள்ளத்திலும் எங்கும் இருக்கின்றநாதனை, பிம்பாதிகளில்லாத்திரம் இருக்கின்றதாக ஒப்பியபுத்தியை அபேக்ஷித்தேயன்றி, அவ்விக்கிரகாதிகளில் ஈசனிருக்கின்றனென ஒப்பியபுத்தியை அபேக்ஷித்துக்கூறினதல்ல.

பிராமணர்களுக்கும் யோகியர்களுக்கும அக்கினியிலும் உள்ளத்திலும் நாதனிருக்கின்றனெனக் கூறியதில், பிராமணர்களைத்தவிர மற்றப்பேர்களுக்குவேதத்தில் அதிகாரமில்லையெனமாத்திரந் தாற்பரியமேயன்றி, பிராமணர்களுக்கு விக்கிரகாதிகளிலும் உள்ளத்திலும் எங்கும் நாதனை உபாசிக்கக் கூடாதென்றநிஷேதங்கிடையாது.

யோகியர்களுக்கு உள்ளத்தில் நாதனைந்தரிசிக்க வல்லமையிருப்பதால், அக்கினிவிக்கிரகாதிகளை முன்னிட்டு நாதனது உபாசனைவேண்டாவிடினும், அக்கினி விக்கிரகாதிகளில் ஈசனை உபாசிக்கக்கூடாதென்றாவது அவைகளில் நாதன் இல்லையென்று

வது, அவர்களால் நிஷேதிக்க வுபகாரப்படாது, அவ்வி தயோகியர்களுக்கும் உள்ளத்தில் கண்டநாதனை எங்கு மிருக்கின்றதாகச் சொல்லிய ஞானசாஸ்திரத்தில் அதி காரமுண்டு.

எங்குமசேதனையறிந்த ஞானிகளும் அக்கினி விக்கி ரகம உள்ளும் இவற்றில் சக்கனில்லை யென்றுவது, இவ ற்றுள் நாதனை உபாசிக்கக் கூடாதெனறுவது, நிஷேதி க்கத் தககவரா காங்கள்; எவர்களாவது நிஷேதித்திடில் நிஷேதித்தவர்களே அறபடப்புத்தியாளரென நிஷேதிக்க ப்படுவார்கள். எதனாலெனில் எங்கு மிருக்கின்றவன் சங்கேதாவிருககததகான். மேலும் எல்லாசசாஸ்திரங் களையும் அப்பியாசித்து போதிலும் நாதனது கருணையு ன்றி அவனது சுபாவம் வெளியாகத்தகாது; அவனது கருணை கிடைக்க வேண்டுமானல், உறுதியாக அவனை நம்பிவணங்கச் சித்தித்திடும். அவனையவனைக்குறி த்து வணக்கஞ்செய்யும் விஷயத்தில், சரியை கிரியை யோகம் ஞானங்களில் எந்தமார்க்கமாக உறுதிப்பட்டு ந ம்பிவணங்கிடிற்றுன் கிருபைசெய்யத்தகான்.

ஆகையால் சரியை கிரியை யோகம் ஞானமென்னு ம் நான்கிலும் விசுவாசமுடையவர்களான கர்மடன் ப க்தன் யோகி ஞானி இவர்களுக்குள்ளதுகளிற் சொல்

வீய நூடக்கைக்குரூ தகைபடி பலன் கிடைக்கவேண்டி மானால், ஈசனது கருணையன்றிக் கிடையாது: ஈசனது கருணைகிடைக்கில மமமாக்கத்தாரிலும் எவர் பெரியர் எவர்சிறியர். ஆகையால மேற்சொல்லியசமயங்களில் ஒருசமயத்தையும் நியதென்று நோக்கத்தகாது

மேலும் சமயங்களை பலனைக்கொடுக்குமா? ஒருஎஜமானுக்குப் பாத்தியபபடாத ஒருகாட்டில் ஒருவன் வேலைசெய்யில, அவ் வேலையே அவனுக்குச் சம்பளங கொடுக்கத் தகாததுபோல, சமயங்களதாமே பலனைக்கொடுக்கத் தகாது. ஆகையால எச்சமயத்தோருக்குநாதனே பலநாதாவாககாரணப்படிவதால எச்சமயத்தோர்களும் அநநாதனைக் குறித நூஉண்மையுடன் ஸ்துதிசெய்யவேண்டுமேயன்றி நாதனடியவராகியஎச்சமயத்தோரையாவது எச்சமயத்தோராயினும் நிந்திப்பார்களாகல் அவர்கள் நாதனையேநிந்தித்தவர்களாவார்கள

ஆலயங்களில் விக்கிரகாதிகள் மூலமாக ஈசனைப் பூசித்து நம்பி வணங்கிவருவதில், விக்கிரகாதிகள் பின்னப்படும்போது ஈசனும் அழிவுடையவனேன்று

---

பலதாதா-பிரயோசனதருபவன.

கான்; சுருக்கமுடையது விஸ்தாரமாயிருக்கத்தகாதே யன்றி விஸ்தாரமுடையது சுருக்கமாய்க் காணப்படலாம். நல்லது, வேதமென்றால் அதின்பொருள் யாதெனில் * வேதயதீதி வேதமெனப்படும். அதற்கு அவ்வளவுவல்லமையேதெனில் நாதனிடத்தினின்றுமுண்டாயிருப்பதினாற்றான். அவ்விதவேதம் பிராமணர்கள்முகமாக இருக்கு எசுர் சாமம் அதாவணம் என்னும் நான்கு வகுப்பாயிருக்கின்ற, இந்தவேதமொன்றுமாத்ரந்தான் ஆகுமேயன்றி மற்றமதத்தார் சொல்லிய யாதொருசாஸ்திரங்களும வேதமாகத்தகாது; ஏதெனில் மற்றெந்த மதத்திலும் சொல்லிய சாஸ்திரங்கள் அந்தந்தமதங்களின் கோட்பாடென்ன, அந்தந்த பிரவாதிகளின் தேசங்களிலுள்ள ஜனங்களின் நடக்கையென்ன, அத்தேசத்திலுள்ள பருவதம் நதி விருக்ஷம் மற்றவஸ்துக்களென்ன, இவைகளைச்சொல்லுங்கால் அந்தந்தேசத்திற்றானே சிலவஸ்துக்களையும், மற்றொருதேசத்திலுள்ள மதங்களின் கோட்பாடுகளையும், அவற்றிலுள்ளவஸ்துக்களையும், வெவ்வேறு நாமமுடையவையாகச் சொல்லாததினாலும், உண்மையைத் தெரிவிக்க அச்சாஸ்திரத்தில் வல்லமையில்லாததினாலும், இந்தவேதத்தில் சக

---

* வேதயதீதி - நாதனையுள்ளபடி தெரிவிப்பது.

தஸ்வரத்தை விட்டுவந்த மாத்திரை விசர்க்கம் ஸ்தாயி கலா இவைமுதலாகிய ஞானமென்ன, மந்திரம் வியாகரணம் நிகண்டு சந்தோபிசிதம் நிருத்தம் சோதிடம். இந்த ஆறு அங்கஞானமென்ன, பதம் கிரமம் கனம் ஜடை இவற்றின் ஞானமென்ன, * புராணம் பதினெட்டு அதின் @ உபபுராணம் பதினெட்டு மறுக்கூறல் விஸ்திரிக்கப்பட்ட ※ ஸ்மிருதி பதினெட்டு இவரகசியம் பார

---

* புராணம் பதினெட்டாவன- பிரமம, பதுமம; வைணவம், சைவம், பாகவதம், பௌஷ்யம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்நேயம், பிரமகைவர்த்தம், இலிங்கம், வாராகம் ஸ்காந்தம். வாமனம், கூர்மம், மச்சியம், காருடம், பிரமாண்டம் யென்பனவாம,

@ உபபுராணம் பதினெட்டாவன- உசனம் கபிலம் காளிகம் சனற்குமாரம் சாம்பவம் சிவ [illegible] சௌரம் தூர்வாசம் நந்தீசம் நாரசிங்கம் நாரதீயம் பாராசரம் பார்க்கவம் ஆதித்திரம் மாரீசம் மானவம் வாசிட்டலைங்கம் வாருணம் என்பனவாம்.

※ ஸ்மிருதி பதினெட்டாவன- மநு அத்திரி ஔ[illegible] விஷ்ணு யாஞ்ஞவற்கியம் உசனம் ஆங்கிரசம் யமம் ஆபஸ்தம்பம் சம்வர்த்தம் காத்தியாயனம் பிரஹஸ்பதி பராசரம் வியாசம் சங்கலிதம் தக்கம் கௌதமம் சாதாதபம் வசிட்டம். இவற்றுள் சங்கலிதம் யுகம் [illegible]

முதலாகிய இதிகாசங்கள் ஈசனால் மொழிந்தருளப் பட்ட சைவாகமம் ✠ இருபத்தெட்டு வைகானசம் பாஞ்சராத்திரம் முதலிய வைணவாகமங்கள் இரணிய கர்ப்பமென்ற ஆகமம் வார்கஸ்பத்தி. யாமளம் இவற்றின் ஞானமென்ன, சாம்பர முதலிய அறுபத்துநாலுகலை ஞானமென்ன, இவைகளெல்லாம், ஞானமுடையவனும் குருசம்பிரதாயமாகக் கிரகித்தவனும் ஈசனருக்கருணைக்கு உரித்தானவனும், இருக்கவேண்டும். இவையே முன்சொல்லிய வேதப்பொருளில் அதிகாரியின் இலக்ஷணமாம்.

இப்படிப்பட்ட வேதப்பொருளின் விவரம், பதத்தை விட்டுவந்த பொருளொன்று வாக்கியத்தை விட்டுவந்த பொருளொன்று அக்ஷரத்தை விட்டுவந்த பொருளொன்று வேதம் மந்திரரூபமானதால் மந்திரத்தை விட்டுவந்த பொருளொன்று வேதம்யாகசாதகமாயிருப்பதால் பிரயோகத்தை விட்டுவந்த பொருளொன்று வேதம்

✠ சிவாகமம் இருபத்தெட்டாவன - காமிகம் யோகஜம் சிந்தியம் காரணம் அசிதம் தீப்தம் சூக்குமம் சகத்திரம் அஞ்சுமான் சுப்பிரபேதகம் விசயம் நிசுவாசம் சுவாயம்புவம் அனலம் வீரம் இரௌரவம் மகுடம் விமலம் சந்திரஞானம் விம்பம் புரோற்கீதம் லளிதம் சித்தம் சந்தானம் சருவோத்தம் பரமேச்சுரம் கிரணம் மேதம் வாதுளம் என்பனவாம்.

௪- சங்கர- என்- ஜகமனைத்திற்கும் ஆனந்த
தானவிசேஷத்தால் சுகத்தைக்கொடுத்துச் சுகிப்பித்து
ம், மற்றொருதவியின்றித் தானுஞ்சுகரூபமாயிருக்கின்
றதெனப்படும்.

௫- நீலகண்ட - என்- உடலாய்விளங்கிய நானாவ
ஸ்தைகளில் மூன்றுமவஸ்தையாங் கண்டத்தில் அஞ்
ஞானமாங் காளகூடவிஷத்தைத் தரித்தும், துரியசுபா
வமாந்தான் அவிச்சியாய்க்கொண்டு மற்றமூன்றவஸ்
தையாகு சீவசுபாவத்தைத் தன்வல்லமையால் இரக்ஷி
த்திருந்ததெனப்படும்.

௬- திரிநேத்திர- என்- மூன்றவஸ்தையிலும் மூ
ன்றுகண்களாகவிளங்கிய விஸ்வதைஜஸப்பிராஞ்ஞர்களை
மூன்றவஸ்தையிலும் மூன்றுகண்ணாக உடையதெனப்
படும்

௭- சந்திரசூட - என்- சமத்காரத்தால சருவஜ
கத்தையுஞ் சித்துப்போல விளங்குவித்து, சித்தைத்த
விர வேறில்லையென்று ஜகத்தைநிஷேதித்து, விளங்கி
நின்ற சின்னிபத்தை முடிவில் தானாகவிழுங்கி விளங்
குகின்றதே அலங்காரமாக உடையதெனப்படும்.

௮- கங்காதர- என்- சூழ்க்கியிற் சுபாவமாய்
ண்மையை ஆளாக்கிருந்திடினும், அடையப்படாத
போதுதோன்றிய பிராந்தியைநீக்கி, அவஸ்தைமூன்று

க்குஞ் சூக்ஷ்மமாய விளங்கியபிரஞ்ஞையை முடிவில தனக்கு வேறில்லாததாயத் தரிக்கின்ற தெனப்படும்.

கூ— கபாலீ— எ- ன்- நிர்ப்புடியாம மூன்று முடிச்சுடைய மூலாவஸ்தையென்ற ஜடையை, முடிவில் தன்னைத்தவிர வேறில்லையெனத் தானாய்ச் சேஷித்த ஞானமெனப்படும்.

யo— பகவான்- த - ள்- முத்தொழிலும் மூன்றவஸ்தையிலும் பேதமாய்விளங்கிய ஐகவரம், மூன்றவஸ்தையுடைய முத்தொழிலும் தன்னைத்தவிர வேறில்லாததாக அறியச்செய்து, தானாகத் தன்னையறிந்து விளங்கியதெனப்படும்.

யக- திரியம்பக- எ- ள்- விராட்டு இரணியகர்ப்ப அந்தரியாமி மூவரும் தன்னிற்றோன்றியவர்களெனவும், தன்னைத்தவிர அவர்கள் வேறில்லையெனவும், தெரிவித்துத் தானாய் விளங்குகின்றதெனப்படும்.

யஉ. திரிபுராரி- எ- ள்- அதிஷ்டான ஞானமான தனது விளங்குதலாம் மந்தகாசத்தால், அவஸ்த்தை..... ந்திரிபுரமெரிக்கப்பட அவைகளுந் தன்னைத்தவிர வேறில்லாதவைகளாகக் கொண்டு, தானாய்விளங்கியதெனப்படும்.

யந. காலாரி- எ- ள்- அஞ்ஞானம் மாயை காலத்

தனைசத்தையால் வியாபித்து, அச்சகத்தையும், அச்சக்தியையும் தன்னைத்தவிர வேறிலலாததாகக்கொண்டு, தானாய்நிறைந்த சைதன்னியமெனப்படும்.

உ- அச்சுத-எ-ன்-தானேதன்சக்தியாலே, ஜகத்தாப்த்தோற்றி, அந்தஜகமிருந்திடினும் நசித்திடினும் ஏற்றக் குறைச்சல்களின்றி ஏகசுபாவமாய் விளங்கிய சைதன்னியமெனப்படும்.

௩- கோவிந்த-எ-வ-ஜீவர்களுக்கு நானாவாய்த்தோன்றிய ஜகத்ரூப சம்சாரத்தைத, தனது ஆத்மசுபாவத்தால் இல்லாமற்செய்து, அவர்களையுந் தானாகவிளங்குவித்து, மோக்ஷரூபமாய் விளங்கிய சைதன்னியமெனப்படும்.

௪- பத்மநாப எ-ா-தனது சக்தியாற் சகலஜகத்தையும் சங்கோச விகாசமுடையதாயளவிட்டு, அவ்விதஜகத்தையுஞ் சக்தியையுந் தனக்கு வேறில்லாததாய்த் தன்னுளடக்கிக், தானாய்நின்றதெனப்படும்.

௫- மாதவ-எ-ன்-சகல ஜகத்துக்கும் வித்தாகிய மாயைக்கு மேலானவனும், தனக்குமேலாக ஒன்றையுங் கொள்ளாதவனையும், அந்தஜகத்தையும் மாயையையும் தன்னைத்தவிர வேறில்லாதவனாகக்கொண்டு தானாக விளங்கியதெனப்படும்.

௬- ஹ்ருஷீகேச: எ-ன்-சகலஜகத்தையும் சுகவேசிக்

செய்து, தனதருளால் விஷயசுழுத்தி சமாதி இவைகளில் ஆனந்தமாயவிளங்கிய தானென தன்சக்தியால சகலங்களையும் ரமிப்பித்து, சகலத்தையும் தன்னைத்தவிர வேறில்லாததாய்க்கொண்டு தானாயிநின்ற தெனப்படும்.

௰உ- திரிவிக்கிரம ஈ-வ-மூன்றவஸ்தைகளையும் முத்தொழிலையும் கிரியையையும் தனதுசுபாவத்தால் அதிக்கிரமித்து அவைகளையும் தனைத்தவிர வேறிலலாததாய்க்கொண்டு தானாய்விளங்கியதெனப்படும்.

௰௩- கிருஷ்ண- எ- வ- ஆனந்த சுபாவமாந் தனது சக்தியால் சகலங்களையும் புஷ்டிபாபித்து, சகலங்களையும் அதிமோகத்துடன தனனிடத்தில் பிரேமையுடையதாகச் செய்து அவைகளைத் தன்னைத்தவிர வேறிலலாததாக விழுங்கித் தானாய் விளங்கியதெனப்படும்.

௰௪- ஜநார்த்தன- எ- வ- சகல ஜகத்தும் தன்னால் சிருஷ்டிக்கப்படவும் பரிபாலிக்கப் படவும் சங்கரிக்கப் படவும், அதைகளத்தையுந்தன்னைத் தவிர வேறில்லாததாகக் கொண்டு தானாய்நின்றிலங்கிய தெனப்படும்.

௰௫- தாமோதர- எ- வ- சகல ஜகமும் உண்டாகியும் விளங்கியும் அழிந்தும், தன் வியாபகத்துக்கு வேறில்லாததாகத் தன்னிடத்தில்லையென்றுந் தானாயிருக்கின்றதெனப்படும்.

௰௬ - பங்கஜாக்ஷ - எ-ள். சகலசீவர்களையும் சேற்றிலகப்பட்ட பிராணியைப்போல அசைவுக்கிடமின்றிச்செய்யும்படி, அஞ்ஞானமாம் பங்கத்தில் அழுந்தி அறிவில்லாததாய்ப் பவித்தும், விவேகமாந் தனதருளால் ஞானக்கண்ணைத் தந்து சருவவல்லமையாக அவர்களுக்குத் தன்னை விளங்குவித்து, அவர்களையும் தன்னைத்தவிர வேறில்லாததாகக் கொண்டு தானாய்த் தரித்ததெனப் படும்.

௰௭ - நாரசிம்ஹ எ-ள்- அநேக நாமரூபங்களாய்த் தோன்றிய ஜகத்தை இரண்டாமவஸ்தையிற் சிதாபாச சீவஞானத்தால் விளங்குவித்து, மூன்றாமவஸ்தையில் ஜகத்தையுந் தன்னையும் அறியவல்லமையில்லாததாயனுப்பவித்த பிராஞ்ஞனுக்கு சிவபோதத்தைத், தனதருளால் விளங்குவித்து, சாக்ஷியாய்நின்ற தானானது தன் ஞானக்கண்ணால் அனைத்தையும் வேறில்லாததாகக் கொண்டு, தானாய் விளங்கியதெனப்படும்.

௰௮ - வாராக-எ-ள்- சகலஜகத்துக்குமோகத்தால் முதலாகவிளங்கிய நானென்கிற ஆனந்தமயகோசத்தை அநான்மப்பொருளாக நீக்கி, மேலான ஆன்மப்பொருளாய் விளங்கித் தன்னைத்தவிர அனைத்தும் வேறில்லையெனக்கொண்டு தானாய்விளங்கியதெனப்படும்.

௰௯ - மத்ஸ்ய-எ-ள்- ஜடமான சகலஜகத்தையும்

தனது திருவருளாம் பார்வையாற் பார்க்க, அனைத்தும் ஞானவல்லமையுடையதாய் விளங்கிடச்செய்து, அவ்விதஞானவல்லமையுடைய அனைத்தும், தனது ஞானப்பார்வையாற் தன்னைத்தவிர வேறில்லாததாகக்கொண்டு, தானமாத்திரமாயச் சேஷித்த தெனப்படும்.

உய- சூக்ஷம-என்-அதிரிசியமான தானே திரிசியமாக அதிவிர்வுடைய சகலஜகங்களாய விரிந்து, அவைகளை அதிரிசியமான தனதுசக்தியால அதிரிசியமான தன்னைத்தவிர வேறிலலாததாயடக்கிக்கொண்டு, சூக்குமமான தானாய விளங்கியதெனபபடும். இந்நாமங்கள் யோகம ஆலலது காரணமெனபபடும்.

உக- நர்சுஷ்டி-என்- சகல இந்திரிய அநதக்கரணங்களின்வேகமுடைய அடைவுககுமுன்னமே சலனமின்றி, அவ்விடங்களில் தனது அடைவு இருக்கின்றதாங்கவே விளங்குவித்து, அவ்வித தனது வேகவல்லமையைத்தவிர அவைகளுக்கு கமனசாமர்த்தியமும் வேறிலலையெனச்செய்து, அனைத்துந் தானாய்க்கொண்டிவின ...டியதெனப்படும்.

கஜமுக-என்- தோற்றி மறையாநின்ற சகல ஜகங்களின் தோற்றதலும் மறைதலும் தன்முகமாகச் ...த்து அனைத்துந் தானை தன்முகத்தைத்தவிர வேறில்லாததாகக்கொண்டு, முதன்மையான ...மா

த்திரமாய்ச் சேஷித்ததெனப்படும்.

உ- கணேச- என்- சகலஜகங்களின் பகிரிந்திரியம் அந்தரேந்திரியமாகிய சமஷ்டி வியஷ்டியான தேவகணங்களைத் தனது சன்னிதானத்தால் நியமித்து, அவைகளைத் தன்னைத்தவிர வேறிலலாததாகக்கொண்டு, தானேவிளங்கியதெனப்படும்.

க- குமார- என்- சகலஜகங்களின் சூக்ஷிதமாகிய அஞ்ஞானமயமாய இவற்றைத் தனதருளால் இல்லாததாகச்செய்து, அனைத்தையுந்தானாக விளங்குவித்துத், தான்மாத்திரமாயத் தனித்ததெனப்படும்.

ச- சுப்பிரமணிய- என்- ஸ்ரீவேசர்ப்பத்தோடுங் கூடியஅனைத்தையு முக்காலத்திலும் வேறில்லாமற் கொண்டு, தானாகப் பிரகாசித்ததெனப்படும்.

இவ்வித நாமங்களின் இலக்கணமாய் விளங்கிய நிர்க்குணப்பொருளை, ஜகமறிந்து உய்யும்பொருட்டு அவ்வித சூக்குமார்த்தங்களை ஸ்தூலமாய அவதாரங்களிற் காண்பித்து, அதை உபாசிக்கின்றவர்களுக்குச் சூக்குமமான தன்சுபாவத்தை அருளிச்செய்கின்றதென்பது தாற்பரியம்.

சொரூபமே ரூபமாயவளங்குகின்றது; ரூபமேநாமமாய் விளங்குகின்றது; நாமம் ரூபத்தைத்தெரியப்படுத்தி அத்ரூபமாத்திரமாய் விளங்கிடும். அவ்வித ரூப

ம் தன்னைத் தியானஞ்செய்யாநின்றசாதகர்களின்மனம் தன்னிடத்திலயிக்க, தானும் சாதகர்களின்மனதோடும் லயித்துத், தன்னுதாரமான ஞானசுபாவமாகத் திரிபுடியற்றுவிளங்கிடும். அப்பொழுது சாதகர்களின் தியான சாதனமான மனதிற பிரதிபிம்பித்த சிதாபாசனுஞ் சீவசைதன்னியம், அதிஷ்டானத்தைத்தவிர வேறிலலாததாகக்கொண்டு அதிஷ்டானமாத்திரமாய் விளங்கி அதிஷ்டானத்தின்றுளால் விழித்தபின், அதிஷ்டானமான நாமே ரூபமாயும் நாமமாயும் நம்மைத் தியானிக்கும் மனம் சீவனகளாயும் தோற்றிவிளங்கிறோம் ஆகையால் நம்மைத் தவிர முக்காலத்திலும் வேறிலலையென அருளிச்செய்தீரும்.

மேலும் சொரூபத்துக்கு எவ்வளவு மகிமையிருக்கிறதோ ? அவ்வளவு மகிமைரூபத்துககும் நாமத்துக்கும். இருக்கவேயிருககிறது. அதெப்படியெனில் ? ஏகசக்கிராதிபதியாகிய ஒரு மஹாராஜா தான் அரண்மனையில் தூங்குங் காலத்தில், சொரூபமாத்திரமாயிருக்கின்றபடி, அந்தசொரூபத்தை மஹாராஜாவென்பதற்குத் தடையில்லை; 'நான் தூங்கினேனென்று' மஹாராஜாவாற்சொல்லப்படுவதால். அவனே விழித்தபின் சிங்காசனத்தில் உடலான ரூபமுடையவனாய் மஹாராஜாவென்று உபசரிக்கப்படுபவனைக் காணப்படுவதால்.

அவனது சொரூபத்துக்கும் சொரூபமுண்டயவனது உடலுக்கும் பேதம் நினைக்கத்தக்கதில்லை: அப்படியே அவனது நாமாங்கிதமாயுள்ள முகர் அல்லது முத்திரைக்கும் பேதம் நினைக்கத்தக்கதில்லை; மூன்றுக்கும் ஒன்றுபோலவே உபசாரஞ்செய்யத்தக்கதுதான்.

மேலும் நாமாங்கிதம் முகருக்கு மகிமையதிகமாகவுங்கூறப்படலாம் எப்படியெனில்? அரசனது சுபாவமும் அவனது ரூபமும் ஜகத்துக்குத் தெரியாதிருந்தபோதிலும், அவனது முகரால அவனது ஸ்திதி அறியப்பட்டு அந்த முகரை அவனைப்போலவே மானிப்பதானுக்காணப்படுவதால, முகருக்கு மகிமை அதிகமெனக்கூறுகிறதெப்படியோ? அப்படியே தேவர்களுக்குந் தேவராகிய மஹாதேவரது சொரூபமும் ரூபமும் அவரது நாமத்தால் தெரியவேண்டியதிருப்பதால், நாமத்துக்கும் அவரது ரூபத்துக்கும் அவரது சொரூபத்துக்கும் பேதமில்லையெனவும். [illegible] ஞாத்தெரிய உபசாரஞ்செய்வதில் நாமத்திற்கு அதிகமெனவும் கூறத்தக்கது. ஆகையால் பரமசிவத்தினது சுபாவத்தை அடையவேண்டுங் கருத்துடையவர்கள், அவரது திருநாமத்திலும் அவரது ரூபத்திலும் அதிகபக்தியுடையவர்களாயாகவேண்டும்.

முற்றிற்று

### பதின்மூன்றாவது

### பஞ்சவக்திரவிளக்கமுறைத்த

### பிரகரணம்

பிரமா விஷ்ணு ருத்திர ஈசுர சதாசிவர் என்னும் ஐந்து தத்துவங்களையும், " ஈசான தற்புருஷ அகோர வாமதேவ சத்தியோஜாதமென்னும்,, ஐந்து முகங்களாகத் தரித்து விளங்கிய பரமசிவத்தைத், தனது இருதயகமலத்தில் அநுசந்தானித்து, அவ்வித பரமசிவத்துக்கும் ஜகத்திற்குமுள்ள ஐக்கியவிசேஷத்தால் சுவாநுபவத்தையடைந்து, சாதுக்கள் விளங்குந்தன்மையாவது.

பஞ்சதத்துவங்களாய் விளங்கிய பஞ்சமுகமுடைய பரமசிவத்தை இருதயத்தில் தியானித்து, அதில் தற்புருஷமுகம் நிவிர்த்திகலையுடைய பிரமாவானதால், அவ்வித உபாதியையுடைய அம்முகத்தைச் சகலமான கந்தம் பொருந்திய பிருதிவிதத்துவத்திற்கு அதிஷ்டான தேவதையாக விசாரித்து, ஒருகண்ணாடியில் பட்டணம் பிரதிபலிக்கின்றதுபோல, அம்முகத்தில் யாவத்பூமியும் அடங்கிவிளங்குவதாய் அநுசந்தானித்து, அவ்விதபூமிக்கும் அம்முகத்திற்கும் அபேதத்தையாலோசித்து, அப்படியே ஜலதத்துவத்தை வாமதேவமுகத்திலும் அக்கினிதத்துவத்தை அகோரமுகத்திலும் வாயுதத்து

வத்தைத் தற்புருஷமுகத்திலும் ஆகாசத்தத்துவத்தை
ஈசானமுகத்திலுமாக ஐக்கியஞ்செய்து, அவ்விதபஞ்
சமுகமுடைய பரமசிவத்தை அபேதமாய்த் தன்னைத்
தவிர வேறில்லையெனப் பஞ்சகோசாதீதனைத் தியா
னித்து, தன்னுடைய பிரகாசத்தினாலேயே தனது பஞ்சேந்தி
ரியங்களும் விளங்குவதாக அறிந்து, தனது பஞ்சமுகத்
தின் வல்லமையே ஒவ்வொரு இந்திரியங்களின் வல்ல
மையாய் விளங்குகின்றதென அறிந்து, அவ்விதவல்ல
மைகளால் பிரமாண்டத்தை வியர்பிக்குங்காலத்தில் ஈ
சானதத்துவமாகிய சுரோத்திரேந்திரியவிருத்தியிற் பிர
திபலித்த தனதுசைதன்னியத்தால், வியாபகமுடைய
பிரமாண்டத்தில இடைவிடாததன்மையாய் விளங்குகி
ன்றஆகாயம் சத்தகுணமுடையதாகையால் ஆகாயமிரு
க்குமிடமெல்லாம் சத்தமிருக்கவேண்டுமாகையாற்சத்
தத்தைத்தவிர ஆகாயம்வேறில்லையென்றிருணயித்து, அ
வ்விதபிரமாண்டத்தில் உள்ளும்வெளியும்வியாபித்திரு
க்கின்றபடிசத்தத்தை அநுசந்தானித்து, அவ்விதபூர்ண
நாதத்தைச் சுரோத்திரேந்திரியவிருத்தியால் வியாபித்
து, அவ்விதசத்தத்தை ஆகாயவிஷ்டகாரியசாங்கியத்தி
லேயாகவும் அவ்விதசுரோத்திரேந்திரியவிருத்தியை ஈசா
னதத்துவவிஷ்டகாரணசாங்கியத்திலேயாகவும், அவ்
வாறு இரண்டுவிதமாகத்தோற்றிக் காரியகாரணமாய்

விளங்கிய சாந்தியதீதசக்தியைத் தவிர சத்தரும் சத்தத்தைவிளங்குவிக்கின்றவிருத்தியும் வேறில்லையெனத் தெளிந்து, அவ்விதசக்தியும் சக்தனான நம்மைத்தவிர வேறில்லையென அநுபவிக்க, ஈசானதத்துவமும் ஆதின்சக்தியானசாந்தியதீதகலையும நம்மைத்தவிர வேறில்லையென அநுபவத்திற்குவருநம.

இப்படியே தற்புருஷ தத்துவமாகிய தொக்கிந்திரியமும் சாந்திகலையும சகலபிரமாணடங்களிலும் உள்ளும் வெளியும் வியாபித்த ஆகாயத்தில உள்ளடங்கியினங்கிய ஸ்பரிச குணமுடைய வாயுதத்துவத்தைஸ்பரிசகுணமாத்திரமாக அறிந்து அவ்வித வியாபகஸ்பரிசத்தை உள்ளபடி, அநுசந்தான விசேஷத்தால் அநுசந்தானித்து, தன் தேகத்தில ஸ்பரிச குணத்தைத் தொக்கிந்திரியம் வியாபித்தறிவதுபோல, தியானித்த வியாபகமுடைய ஸ்பரிச குணத்தைத், தனது தொக்கிந்திரியத்தால் விருப்பத்தறிய, வாயுவில் ஸ்பரிசகுணமாய் விளங்கிய காரியரூபசாந்திகலையும் தொக்கிந்திரியவிருத்திரூபமாய் விளங்கித் தற்புருடத்தின்காரணரூபசாந்திகலையும் வியாபகமாய் அநுபவிக்க, அவ்விதசக்தியும் சக்தனான நம்மைத்தவிர வேறில்லையென அநுபவத்திற்குவருநு.

அப்படியே அகோரதத்துவமான சோத்திரேந்திரியத்

தால் பிரமாண்டத்தில் வியாபகத்தன்மையுடையவாயு தத்துவத்திலுள்ளடங்கிய அக்கினி தத்துவத்தை ரூப குணமாக ஆலோசித்து, அவ்விதரூபத்தைத்தவிர அக்கினிவேறில்லையென அறிந்து, அவ்விதரூபத்தைத்தகுந்தபடி வியாபகமாய் அநுசந்தானித்து, வியாபித்தறிய அவ்வித இந்திரிய விருத்தியில விளங்கிய அகண்டரூபத்தைக் காரியரூப வித்தியாகலையெனவும், அதை விளங்குவிக்கின்ற இந்திரியவிருத்தியை அகோரதத்துவத்தின் காரணவித்தியாகலையெனவும அறிந்து, அவ்வித இரண்டுசக்தியும் சக்தராகிய நம்மைத்தவிர வேறில்லையென அநுபவத்திற்கு வரும்.

அப்படியே வாமதேவதத்துவமான ரசனேந்திரியத்தால்பிரமாண்டத்தை, உள்ளும் வெளியும் வியாபித்த அக்கினித்தத்துவத்திலுள்ளடங்கிவிளங்கிய அப்புதத்துவத்தை, ரசகுணமாக நிரூபித்து அவ்விதரசத்தை எங்கும் நிறைவுடையதாய் அநுசந்தானித்து, அவ்விதபூரணமாய்விளங்கிய ரசத்தை வியாபித்தறிய அவ்வித இந்திரியவிருத்தியில் விளங்கிய இடைவிடாத நிறைவுடைய ரசகுணத்தைக் காரியரூப பிரதிஷ்டாகலையெனவும், அதைவிளங்குவிக்கின்ற இந்திரிய விருத்தியை வாமதேவத்தின் காரணரூப பிரதிஷ்டாகலையெனவும் அறிந்து, அவ்வித இரண்டு சக்தியும் சக்த

ஞன் தன்னைத்தவிர வேறில்லையென அநுபவத்திற்கு வரும்.

அப்படியே சத்யோஜாதமான ஆக்கிராணேந்திரியத்தால் ஜலத்தை வியாபித்து விளங்கிய ஜலதத்துவத்தில், உள்ளடங்கி விளங்குகின்றதான பிருதிவி தத்துவத்தைக், கந்தத்தைத்தவிர வேறில்லையென நிருணயித்து, அவ்விக்கந்தத்தோடு அநுசந்தான விசேஷத்தால் வியாபகமாய் அநுசந்தானித்து, அவ்வித வியாபகத்தத்தை வியாபித்திருப்ப அவ்வித இந்திரிய விருத்தியில விளங்கிய கந்தகுணத்தைக் காரியரூபநிவிர்த்திகலையெனவும், அதை விளங்குவிக்கின்ற இந்திரிய விருத்தியைசத்யோஜாதத்தின் காரணரூப நிவிர்த்திகலையெனவும், அறிந்து அவ்வித இருகலையாய் விளங்கிய சுத்தியும் சத்தஞன் தன்னைத்தவிர வேறில்லையென அநுபவத்திற்குவரும்.

இனித் தன் ஸ்தூலசரீரமுதல் சகல தூலசரீரத்தோடுங்கூடிய பாஞ்சபௌதிகபஞ்சபூதங்களாய் விளங்கிய சகல ஜகமும் பஞ்சேந்திரியங்களாய் விளங்கிய ஞானேந்திரியத்துவங்களைத்தவிர வேறில்லையென்று, "அவ்விதபஞ்சதத்துவங்களாய்" விளங்கிய பஞ்சேந்திரிய விருத்திஞானபஞ்சகலைகளென்னை, அவ்விதகலைகளில் சுத்தமாய்விளங்கிய ஐந்து பேதமுடைய சக்தியென்னை,

இவற்றின் ஐக்கிய விவரமாவது.

கந்தகுணமானது பிருதுவிரூபமானதால், அப்பிருதுவி ஜலத்தினிடமாய் விளங்குவதால், அவ்வித ஜலம் ரசரூபமானதால், அவ்விதரசத்தைத்தவிர கந்தமும் வியாப்தியமானதால, இல்லாததாய்க்கொண்டு ரசத்திலடங்கிவிளங்கும், இவ்விதகந்தத்தை வியாபித்த காரணநிவிர்த்திகலையும், அதின் சக்தியை சம்யோஜகமென்று ஆக்ராணேந்திரிய சைதன்னியமும் ரசத்தோடுங்கூட வாயுதேவதத்துவமான ரசனேந்திரியத்தின் விருத்தியான காரணபிரதிஷ்டா கலையையுடைய சக்தியும் இந்திரிய சைதன்னியத்தில் அடங்கி நிற்கும்.

அப்படியே காரண சம்யோகிதகலைவரையும் அடங்கிட விளங்கும், இந்திரிய விருத்திகளான கலாபேதங்களில்லாததாய்க்கொண்டு ஜகப்பிரளயகாலத்திலும் இல்லாததாகவே ஆகிவிடும். இவ்விதம் இந்திரியரூபமான சகாரணகலைகளும், சங்காரரூபமான சகாரீரகலைகளும், ஜகத்தோடுங்கூட இல்லாவிடில் அந்தக்கரணமும மனம் புத்தி சித்தம் அகங்காரம் இந்த நான்குங்கூட, "இந்திரியங்களின் இடமாக விளங்கிய பஞ்சகலைகளைத்தவிர தத்துவங்களுக்கு" வேறு வல்லமைகள் இல்லாததினால் சக்தியற்று அவைகளும் இல்லாததுகளாகவே

மனம் புத்தி சித்தம் அகங்காரமாகிய நான்கும்
இல்லாவிடில், அந்தக்கரணம் வியாபாரசூனியமாய்க்கொ
ண்டு இல்லாததாய் நசித்திடும்; நசிக்கவே அபார கரு
ணாசாகரமாகிய தியானத்தில அநுபவிக்கப்பட்ட பரு
சமூகமுடைய பரமசிவம், கருணையால் அகண்ட
சச்சிதானந்த பூர்ணமான கூடஸ்தஞான மாத்திரமாய்
விளங்கி, திபுரதா வசகவிர வேறில்லாததாகவே அநு
பவிக்கப்படும்.

பின்பு அதிஷ்டான சச்சிதானந்தஞானமாத்திரமாய்
விளங்கிய பரமசிவமாகியதான் விழித்தகாலத்தில்,
முன் உபாசனாகாலத்திற்கண்ட ஜகம், காரியரூபமான ச
கலை, காரணரூபமான சகலை, அவைகளின் ஐக்கியம் ஐக்
கியத்தால் மனோபுத்தி சித்தாகங்காரம் அந்தக்கரணம
இவற்றின் இலயமை, சகுண தியானகாலத்திலும் இப்
பொழுதுமுள்ள அவைகளின் விளங்குதல், தியானத்தில்
சகுணமாய் விளங்கிய பஞ்சமுகப்பரமசிவம், அனந்த
மும் அதிஷ்டானஞானரூபகூடஸ்தவியாபகப்பரமசிவ
மும் தன்னைத்தவிர வேறுகாணப் படாததினால், தன்
னைத்தவிர வேறில்லையென அநுபவித்து, பெருங்கரு
ணைக்கடலாகிய பரமசிவத்தின் காருண்ணியத்தைப்ர
மாச்சரியத்தோடும் ஸ்துதிக்க அப்படியே தியானக்

தத்திருப்தர்களாய் ஆகின்றார்கள்.

முற்றிற்று.

## பதினான்காவது

## தியானுநுபவமுறைத்த

## பிரகரணம்.

தன்னுடலை இரத்தமாம்சாதி இல்லாத சருவாவய
வங்களோடுங்கூடிய தேகாகார விருத்தி மாத்திரமாகச்
சுத்திசெய்துகொண்டு, அவ்வித விருத்தி மாத்திரமாயு
ள்ள தேகத்தின் இருதயத்தில் எட்டிதழுடைய இரத்தி
னமயகமலத்தைத் தியானித்து, அதின்மத்தியில் அநே
ககோடி சூரியப்பிரகாசமாயுள்ள அபாரகருணாகரனு
டும் நீலகண்டனும் சந்திரசூடனும் உமையொருபா
கனும் கங்காதரனும் விளங்குகின்ற சதாசிவமூர்த்தி
யை, சத்தியசங்கற்பத்தால் தியானித்து, சோடசோப
சாரஞ்செய்து, அவனைச் சருவஞ்ஞனாகவும் சருவேசனா
கவும் சருவகாரணனாகவும் சச்சிதானந்தனாகவும் து
திசெய்து, அக்காலத்தில் ஆனந்தபாஷ்பாதியாவிர்மனமு
ளாகி, சுவானுபவவிசேஷத்தால் விருத்தியாகாரத்தினுட
லைத்தவிர மற்றுள்ள சகலபிரமாண்டத்தையும் அதனு
ள்ளடங்கிய வஸ்துக்களனைத்தையும் பஞ்சபூதாம்ச

களையும் பார்த்து இல்லாததுகளாகச் செய்து, சுத்தஸ் படிக சங்காசமாய் விளங்கிய விருத்திரூபமான வஸ் துக்களைத் தோடுங்கூடிய பிரமாண்டத்திற் பிரதிபிம் பித்து விளங்கிய நடராசமூர்த்தியை எல்லாவிடத்திலு ம் தன்னிடத்திற் போல எங்குமுள்ளவனாக அறிந்து, அவனது பிரகாசத்தினாலே சகலங்களும் பிரகாசிக்கி ன்றதாகவும், தான் முதலிய சகலங்களுக்கும் நானென் றதின்பொருள் அவனெனவும், அவனைத்தவிர வேறி ல்லையெனவும், அறிந்து அவனது திருநடனத்தில் அ திர்ந்திலகுகும் ஒளியால் தனதுதேகமுதற்சகலஜகமு ம் மறைபட்டு அப்பிரகாசத்தைத்தவிர வேறில்லாததாக வ ம் அநுபவிக்கப்பட, மின்னொளியிற் கண்ணொளிபடு பட்டுவிளங்காததுபோல மனமும் அவ்விதபூரணப்பிரகா சத்தைஎதிரிட்டுப்பார்க்கும் திறமையில்லாததாகக்கொ ண்டு அவ்விதபூரணப்பிரகாசத்தில் இல்லாததாகவே லயிப்பிக்கும்: மனமிலயிக்கிடில் திரிபுடியில்லாதநிலை முன் உபாசனைகாலத்தில் பூரணப்பிரகாசத்தோடும் விளங்கிய அபாரதயாசாகரனையுள்ள நடராசமூர்த்தியும் தின்றுங்குருவினையுமல் அவ்வித பகதனைத்தவிர வேறில் லாதவனாய்க்கொண்டு அதிஷ்டானஞானமாத்திரமாக வேவிளங்கிடத்தெரிவான்.

பின்பு அவ்விதபக்தனாகிய தான் சமாதிசுகத்தினின்

றும் விழிக்குங்காலத்தில், சகலஜகங்களென்னவ், அதுகளில் தன்றுடலிற் போலவிளங்கிய நடராசமூர்த்திகளென்ன, அதுகளின்பிரகாசத்தில் ஜகம் இல்லாததாக மறைபட்டுப் பிரகாசமாத்திரமாய் விளங்கிய பூரணப்பிரகாசமென்னு அதில இல்லாததாகி யொழிந்தமனோலயமென்ன, பின்பு இருக்கின்றதுபோலுதித்த மனமென்ன, அனைத்தும் சச்சிதானந்தகனமாய்ச் சமாதியிற்பூரணத்தில் விளங்கிய அதிஷ்டானஞானரூப நிர்க்குணநடராசன்றானாகவே காணப்படுவதால், தன்னைத்தவிர அனைத்தும் முக்காலத்திலும் வேறில்லலவேயில்லையெனத் தான்மாத்திரமாயச் சேவித்து இவ்விதபுத்தியை அருளிச்செய்த நடராசனது கருணையை என்னசொல்லுவோமெனமகிழ்ந்திட சமயசங்கரவென மொழிதழுதழுக்கிட அப்படியே அதிஷ்டானமாத்திரமாய் ஆனந்தக்கடலாடுதலு சித்தித்திடும்.

முற்றிற்று

பதினைந்தாவது

விபூதிமகிமையுரைத்த

பிரகரணம்.

விட்கிபொன்றுமகத்தெனவும்மத்திமமெனவுமெலகு

வெனவும் மூவ்வகைப்படும்: அவற்றில் மகத்தாவது அநேககோடி பிரமாண்டமாய் விளங்கிய சிவேசுபேதமுடைய இப்பிரபஞ்சைசுவரியம்,, " எந்தசச்சிதானந்தசுபாவமான வஸ்துவின் தானென ஐசுவரியம்சிமாவிசேஷத்தால்,, முக்காலத்திலும் நிஷேதியாமல் நிஷேதித்ததாகச் சுயம்விளங்குகின்றதோ? அதுவேயாம்.

மத்திமமானது முசியமெனவும் சாமானியமெனவும் இருவகைப்படும். அவற்றில் முக்கியமாவது நானாபேதமுடைய ஜடமான இப்பிரபஞ்சத்தை * உணர்ணநாபிபோல தானே அபின்னநிமித்தோபாதானமாய்க்கொண்டு சிருட்டித்து, அதில் சீவரூபமாயும் அந்தரியாமிரூபமாயும் அநுபபிரவேசித்து அவ்விதசிவசுபாவமான ஜகத்தை அஸ்வதந்திரஐசுவரியமுடையதாய்,, " அந்தரியாமிஸ்வரூபமான ஸ்வதந்திரஐசுவரியமுடைய தனதுஐசுவரியத்தால்,, மேவிச், சருவசாக்ஷியாய்ச் சருவசம்பூரணமாய் விளங்கிய சுவிசேஷப்பிரமசைதன்னியமேயாம். சாமானியமாவது பரதந்திரமான ஜாக்கிர சொப்பன சுழுத்தி இவ்வவஸ்தைகளில், அபிமானமுடைய சீவசைதன்னியத்தின் ஐசுவரியமேயாம்.

பெருவாவது அதிஷ்டானமான பரமேஸ்வரனை அடைந்துய்யும்பொருட்டு சாதனமாக வேதங்களிற் கூறிய விபூதியேயாம்.

---

* ஊர்ணநாபி - சிலந்திப்பூச்சி.

விபூதியென்றதின்பொருள் (விசேஷ) (பூதிகி)* விபூதி. எவனது ஐசுவரியத்தை அபேக்ஷித்து மற்ற ஐசுவரியங்கள் ஐசுவரியங்களேயல்லவோ? அதுவெனப்படும். (விசேஷேண) (பூதிகி) விபூதி. எவனது ஐசுவரியம் எல்லாஐசுவரியங்களுக்கு மேலானதோ! அதுவெனப்படும்.

இப்பொருளுடைய விபூதியில் சாதனவிபூதியென்பது சுருதிகள் சொல்லிய மந்திராதிசாதனங்களால் பசுவின் மலத்தை நீற்றி, அதில் நாசமில்லாத சுத்ததெளிவான நீற்றைப் பிரமபாவனையாற்பாவித்துத் தரித்திட, சீவன் மோக்ஷமுடையவனாகின்றனெனக்கூறியது. இவ்விபூதி ஸ்தூலம் சூக்ஷமம் காரணம் என்று மூன்று பேதமுடையதாகும்; அவற்றில் ஸ்தூலமாவது பாசுபதவிரதம் சீரணவிரதம் சிவவிரதம் விரதம் தவஜ, என்று இவ்விதமான அநேகபேதங்களாகப் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது.

சாதனதிரவியத்தின் விரலாறு வேதத்திற்சொல்லிய தெவ்வாறெனில்; கிரியையிற்சொன்னபடி குண்டமண்டபாதிநிருணயம்பண்ணி, அதில் அக்கினியைப்பிரதிஷ்

* விபூதியெனினும், ஐசுவரியமெனினும், திரவியமெனினும், ஒன்றேயாம்.

டாபனஞ்செய்து, அதில்எங்கும் இடைவீடாத்தன் மையுடைய பரமசிவத்தை மந்திராதிகளிஞற் பாவித்து, அதில் தத்துவஹோமங்கள் செய்து, அதிற் கோமயபிண்டங்களைச் சிவபிண்டங்களாக மந்திராதிகளாற்பாவித்துஹோமஞ்செய்ய, அவ்விதசிவபிண்டத்துக்கும்முன் அக்கினியிற்பாவித்த பரமசிவத்துக்கும் மந்திரவிசேஷங்களால் ஐக்கியத்தைப்பரமகுருக்கள் முசமாகவிசாரித்து, அவ்விபூதியைச் சச்சிதானந்தகனமாம்பரமசிவத்துக்குவேறில்லாததாகவெண்ணி உத்தூளன திரிபுண்டரங்களாகத் தரித்திட, சகலபாவங்களுநீங்கி மேலான விபூதியின்பொருளையடையத்தகுஞ் சித்தசுத்தியுடையவனுய்ப்பவிப்பான் என்பதுதான்.

கோமயமென்பதுபசுவின்மலமானதால், பசுவென்றுல் உலகத்தில் கோவினிடத்திற்பிரசித்திபோல சீவனுங் குறிக்கப்படுவதால், சீவனதுமலம் அஞ்ஞானமாகையால், அவ்வித அஞ்ஞானத்தைச்சுட்டிட ஞானேசுவரியந்தானுகப்பிரகாசிப்பதால், அவ்விதப்பொருளைத் தெரிவிக்கும்பொருட்டு ஸ்தூலமாகக்கூறியது; அவ்வித ஓமத்தின் மந்திரார்த்தம் சருவசம்பூரணஞக விளங்கிய சவிசேஷப்பிரமசைதன்னியமே ஏறக்கியமெனப்படும்.

இதின்விவரம் பிருதுவி அப்பு தேயு வாயு ஆகாயம், இசம்மாங் உதிரம் மேதஸ், மச்சை (வஸ்தி) சுரோக்

திரம் துவக்கு சடசு சங்கலை ஆக்கிராணம், வாக்கு பாதம் பாணி பாயுரு உபஸ்தம், ஜாக்கிரம் சொப்பனம் சுழுத்தி, விஸ்வன் தைஜஸன் பிராஞ்ஞன்; ஆணவம் மாயிகம் கார்மிகம், இவ்வித உபாதிகளையுடைய பசுவா னஎன்மலத்தை நீற்றுவித்து, ஸ்வப்பிரகாசபதியாம்பர மசிவவிளங்குதலேத்தவிர வேறிலாத தாகக்கொண்டு விளங்கும்படி அருள்செய்ய வேண்டுமென்று, ஈசனை வேண்டிவிதிப்படி ஓமவிசேஷத்தால வணங்கிட வணங் குவோன் பக்திக்குத்தக்கதாக ஈசன்தனதுகருணையா ல அப்படியேஅருள்செய்கின்றான்.

இவ்விதவிபூதி தாரணவிதி யெவ்வாறெனில்? சச் சிதானந்தசுபாவமாய் ஏகரூம இடைவிடாநிறைவுடை ய சருவதயாபரனை பரமசிவமே விபூதியிற் பாவிக்கப் பட்டிருப்பதால், அதிற் பரமசிவத்தை அபேதபுத்தி செய்து இவ்விதவிபூதியே பஞ்சபூதங்களும்பஞ்சவி ஷயங்களும் தசேந்திரியங்களும் சருவசீவர்களும் சரு வமுமெனவும், பரமசிவமாம்விபூதியைத்தவிர்ச் சரு வமும் வேறில்லையெனவும் பாவித்து, அப்பரமசிவம் அகண்டமானதால் நகமுதற்சிரசுவரையிலும் வியாபித் திருப்பதாகப்பாவித்துப், பாவிக்கப்பட்டவிபூதியைஉத் தூளனஞ்செய்து, அகண்டபரமசிவத்தில் முக்குணம் மும்மூர்த்தி ஜீவசீவன் மும்மலம் மூன்றுசக்திசமன

